வரை - மலை, மூங்கில்
வலாரி - இந்திரன்
வல்லே - விரைவு
வழுத்துவர் - சொல்வார்
வளி - காற்று
வள்ளம் - வட்டில்
வள்ளல் - தாதா
வள்ளுகிர் - வளைந்த நகம்
வறிஞர் - ஏழைகள்
வனசம் - தாமரை
வனமாலி - திருமால்
வன்பு - வன்மை
வன்றிறல் - மிகுபலம்
வன்னி - பிரமசாரி, தீ

வா

வாகை - வெற்றி
வாச்சியம் - வாத்தியம், சொல்
வாஞ்சை - ஆசை
வாணன் - வாழ்பவன்
வாணி - கலைமகள்
வாம்பரி - குதிரை
வாய்மை - சொல்
வாரம் - அன்பு
வாரணம் - யானை
வாரி - வருணன், கடல்
வாரிசம் - தாமரை
வாரிதி - கடல்
வார் - நீண்ட
வாலிதாம் - சிறந்த
வாவி - குளம்
வாளி - அம்பு
வான நாயகன் - சிவன்
வானவர் - தேவர்
வான் - சிறந்த

வி

விசும்பு - ஆகாயம்
விச்சை - வித்தை
விஞ்சிடு - மிகுதியாக
விஞ்சையர் - வித்தியாதரர்
விடம் - விஷம்
விடை - ரிஷபம்
விடையவன் - சிவன்
விண் - தேவலோகம், ஆகாயம்
விண்டல் - மூங்கில்
விண்டு - திருமால்
விண்ணவர் - தேவர்
விது - சந்திரன்
வித்தகன் - சிவன்
வித்தியா - வித்தை
வித்துநர் - விதைப்போர்
விந்தை - துர்க்கை
விபுதர் - தேவர்
விப்பிரர் - அந்தணர்
விமலம் - பரிசுத்தம்
விமலன் - சிவன்
விமலி - பார்வதி
விம்மல் - துக்கம்
வியன் - பெருமை
விரகர் - சமர்த்தர்
விரகு - தீச்செயல்
விரிஞ்சன் - பிரமன்
விருது - வெற்றி
விரை - வாசனை
விலங்கு - மிருகம்
வில் - பிநாகம் என்னும் சிவன் கைவில்
விழைவின் - விரும்பினால்
விளித்து - அழைத்து
விளிப்பது - அழைப்பது
விளிப்பார் - அழைப்பார்
விறல் - வெற்றி

வீ

வீடுதல் - அழிதல்
வீறு - பெருமை

வெ

வெண்கமலம் - வெள்ளைத் தாமரை
வெம்பவம் - கொடிய பாவம்
வெம்மை - கொடுமை
வெயிலவன் - சூரியன்
வெருட்டுதல் - அச்சமுறுத்தல்
வெருவ - அச்சம்கொள்ள
வெருவி - அஞ்சி
வெற்பு - மலை
வென்றி - வெற்றி

வே

வேட்கை - விருப்பம்
வேட்டல் - மணம்புரிதல்
வேட்டு - மணம்புரிந்து
வேட்பு - வேட்கை
வேணி - சடை
வேணியர் - சிவபிரான்
வேணு - மூங்கில்
வேணுவனம் - மூங்கில்காடு
வேதன் - பிரமன்
வேதா - பிரமன்
வேதிகை - மேடை
வேத்தவை - ராஜசபை
வேத்திரம் - பிரம்பு
வேய் - மூங்கில்
வேரல் - மூங்கில்
வேவல் - வெந்துநீருதல்
வேழம் - யானை
வேள்வி - யாகம்

வை

வை - வைக்கோல்
வைகல் - நாள், தங்கியிருத்தல்
வைகின் - தங்கியிருப்பின்
வைகும் - தங்கியிருக்கும்
வைகுவோர் - தங்குவோர்
வைதவன் - இகழ்ந்தவன்
வைப்பு - ஊர்
வையகம் - பூமி
வையம் - சிவிகை, பூமி
வையத்தீரே - உலகமக்களே



## "ஞானசம்பந்தம்"

கட்டுரைகளுடன் வெளிவரும் திங்கள் இதழ்

திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனத்திலிருந்து வெளிவருவது. சமய உண்மைப்பொருள் முதலியவற்றைக் குறித்த தெளிவான கட்டுரைகள் அடங்கியது சைவசமயத்தின் உண்மைகளை உணர்வதற்குப் பெருந் துணையானது. கையொப்பத் தொகையைக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பிவைக்கவும்.

ஆண்டுக் கையொப்பம்

உள்நாடு ரூ. 2—25 வெளிநாடு ரூ. 3—00

செயலாளர்,
"ஞானசம்பந்தம்" காரியாலயம்,
தருமையாதீனம், மாயூரம் அஞ்சல்,
தஞ்சை மாவட்டம்.